குருவேதுணை.

# சத்திய சூத்திரம்.

# சத்தியவாசகம்.



இவை

மதுரை வண்ணச்சரபம்

திருப்புகழ்ச் சுவாமிகள் முருகதாச சுவாமிகளென

வழங்கும்

ஸ்ரீ-ல-ஸ்ரீ. தண்டபாணிசுவாமிகளால்

அருளிச்செய்தது

ஆவுடையார்பட்டு

ப. வேங்கடசுப்பா ரெட்டியார்களால்

சென்னை

சிவகாமி விலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.

---

ரௌத்திரி௵ கடாவி.

உ

குருவே துணை.

# சத்திய சூத்திரம்

# சத்தியவாசகம்.



இவை

மஹான் வண்ணச்சரபம்.

திருப்புகழ்ச்சுவாமிகள்—முருகதாசசுவாமிகளென

வழங்கும்

ஸ்ரீ-ல-ஸ்ரீ தண்டபாணி சுவாமிகளால்

அருளிச்செய்து

ஆவுடையார்பட்டு

ப. வேங்கடசுப்பா ரெட்டியாரவர்களால்

சென்னை

சிவகாமி விலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.

---

ரௌத்திரி௵ கடகரவி. 1920

உ

குருவே துணை.

# முகவுரை.

வெண்பா

தண்டபாணிக்குரவன் றந்தவிருசத்தியநூல்
கொண்டகருத்தின் குறிப்பறிவோர் —சண்டன்மதன்
வேதாவெ னும்பஸகையால் வெந்துயரெய்தாதுபர
நாதாந்த மெய்துதறிண்ணம்.

சத்திய சூத்திரம், சத்தியவாசகம், என்னு மிந் நூற்பெயர்கள் இரண்டாம் வேற்றுமைத்தொகை யடியாகப் பிறந்த இருபெயர்த் தொடர்மொழிகள்.

இவ்விருநூல்களையும் அரிய மானிடப் பிறவி பெற்றுள்ள ஆன்மாக்கள், உண்மை யறிவுற்று முத்தியடையுமாறு தமது, அருளநுபூதிவிளக்கத் தாற் கருணைமிகுந்து அருளிச்செய்தவர், செந்தமிழ்த் தென்பாண்டிநாட்டுத் திருநெல்வேலியிற் சைவ வே ளான் குலத்தில் அவதரித் துலகப்பிரசித்தியடைந்து விளங்கிய மஹான் வண்ணச்சரபம், திருப்புகழ்ச் சுவாமிகள், முருகதாசசுவாமிகளென வழங்கும் ஸ்ரீ-ல-ஸ்ரீ தண்டபாணி சுவாமிகளாவர்.

இவ்வாசிரியருடைய அறிவின் பெருக்கமும் அருள் விளக்கமும், அன்புடையோர்க்கு விளங்கு

மன்றிச் சாதாரணமானவர்களுக்கு விளங்குதலரி தேயாம்.

சாத்திரவடிவமாயும், தோத்திர வடிவமாயும், சரித்திரவடிவமாயும், இவராற் பாலப்பருவமுதல், ஐக்கியகாலம் வரை யியற்றப்பட்ட நூல்க ளளவுபடா தனவாம். இவர் பலதடவைகளில் வைராகத்தில் தமது பிரபந்தமெழுதிய ஏட்டுப் புத்தகங்களைக் கிழி த்து நீரிலும் நெருப்பிலுமிட்டு, மீண்டும் பத்தியினாற் பாடுந் திருவிளையாட்டுடையரென்பது இவ ரியற்றி யுள்ள ஸ்ரீ குருபரதத்துவ காவியம், வாக்கேற்புக் கொண்ட சருக்கத்தில் விளங்குகின்றது.

(அதுவருமாறு)

"அர்த்தமட்டினி லென்வாய்பாட்டறைந்திடாதிருக்கவில்லை
வத்தவா பாடிற்றங்கை வரைந்தது மனஞ்செவ்வேள்பா
லித்தவாசெய்கென்றேற்றேற்றிட்டது புனலிற்றீயிற்
சத்தமும் பிறவுமாய தமிழ்த்தொடையளவின்றம்மா."

என்றபாடிவரும்.

சத்தியநூல் சொல்லுவோர் சத்தியமுடையரா யன்றோ விருக்கவேணும்? இவர் எத்தகையாரெனின், சத்தியபத்தி முதிர்ந்த வைராகத்தால், பொதியை மலையின் சார்பாயுள்ள திருமலையின்மீது எதி

முருகப்பெருமானை நோக்கி அநேகம் பாட்ல்பாடிச் சத்தியங்கூறி மேலிருந்து உருண்டு சிறிதும் அங்கம் பின்னமின்றிப் பூமியில் வந்து சேர்ந்தனர். ஸ்ரீ முருகக் கடவுள் இப்படிச் சத்தியத்துக்கு முன்னின்று காத்தருளினர்.

இது விவரம்.

"வடதிசையிற் றலைவைத்து மறலிதிசைக் காலீட்டி, யுடலை யந்தத் திருமலையி னுச்சியினின் றுருட்டிவிட்டேன், விடலையிடுந் தேங்காய்போல் வேறுபட்டுச் சிதறுமன், மடமடெனக் கொண்டங்கோர் மண்டறையில் விட்டதன்றே" என்றும், "பல்லிலொன்று மென்பிலொன்று நரம்பிலொன்றும், பழுதுபட்டுப் போகாமற் பாதுகாத்த--நல்லியற் சண்முகப் பெருமா"னென்றும் குருபரதத்துவத்தில் விளங்குகின்றது. இஃதன்றோ சத்தியத்தின் வடிவம்.

இவர்சரிதம் உலகப்பிரசித்த மாதலால் இச்சிறு புத்தகத்திற் சேற்ப வெழுதப்பட்டது. இந்தச்சத்திய சூத்திரம் சத்தியவாசகம், இரண்டும், திருஆமாத்தூரில், முப்பது வருடங்களுக்கு முன்னியற்றினர். இப்போது மேற்கண்ட சுவாமிகளினடியவர்களிற் சேர்ந்த சிரவணபுரம், கௌமாரமடாலயம் ஸ்ரீ-ல-ஸ்ரீ

இராமானந்த சுவாமிகளின் உத்தரவின்பேரில் வெளி யிடப்பட்டன. இவற்றினருமை யுணர்ந்து அச்சிடு வதற்கு வேண்டிய பொருளுதவி புரிந்து தென்னாற் காடு ஜில்லா விழுப்புரம் தாலுக்கா, ஆவுடையார்பட்டு ப. வெங்கடசுப்பா ரெட்டியார் பெரும்புண்ணியத் தைக் கொண்டனர். சுபம்.

கட்டளைக் கலித்துறை.

சத்தியருத்திரன் சத்தியவாசகன் றன்னடியார்
பத்திகொளுந் தண்டபாணிக்குரவன் பகர்ந்தவற்றைப்
புத்திகொண்டாவுடையார் பட்டில்வாழ்ந்துபுரவலர்போ
லெத்திருவும்பெறவேங்கடசுப்பனச்சேற்றினனே.

இங்ஙனம்:

ஷை சுவாமிகள் மாணாக்கனும், குமாரனுமான,

தி-மு-செந்திலுபகம் பிள்ளை.

தெய்வமேதுணை.





ஸ்ரீலஸ்ரீ தண்டபாணி சுவாமிகள்.

உ

குருவே துணை.

# சத்திய சூத்திரம்.

காப்பு.

நேரிசைவெண்பா.

பத்திசித்தி முத்திப் பயனடைவார்க் காதரவாஞ்
சத்திய சூத்திரநூல் சாற்றுவதற்—கெத்திசையில்
வாழு மெவரு மறக்கரிய மெய்ப்பொருளாச்
சூழுங் குருவே துணை.

நூல்.

(முதலாவது)

## தெய்வத்தன்மை.

சூத்திரங்கள்.

தெய்வமொன் றுளதெனத் தேறிப் பணிவது
மானிடப் பிறப்பில் வந்தோர் கடனே. (௧)

தெய்வமின் றென்பவர் தீயவிருகமே. (௨)

பத்தர்தம் மெண்ணப் படிவிளங்குவதே
நித்தமாந்தெய்வ நிலையெனன்முறையே. (௩)

அவனவ னவா யளவில்பற்பலவாஞ்
சமயங்கடோறுஞ் சார்வதோர்தேவே. (௪)

தன்னருள்பெற்றார் தமைப்பெறார்தந்தே
வென்னவிளக்கு மியற்கைதேவினதே. (௫)

பெரிதருள்பெற்ருர்ப் பேஞைதிகலிச்
சிறிதுபெற்றுள்ளார் சிதைவுறுதிங்குக்
கண்டுகண்டுறுதல் கடவுட்டன்மையே. (சு)

நன்ருெடுதீதி னடுநிலைப்பொருளாந்
தெய்வத்தன்மை செப்பருந்தகைத்தே. (எ)

இஃதேதெய்வத் தியற்கையென்றியம்பி
யிகழப்பட்டா ரெண்ணரும்பலரே. (அ)

எப்பொருட்குறிக்கு மியாவர் வணக்கமுந்
தெய்வத்தினவெனத் தெளிகுவதரிதே. (கூ)

தெய்வமென்மெய்ப்பொருள் செயுந்தொழில்பலவற்
ருெருயிரதனையொத் தொளிரச்செய்தலி
னன்றுமநுபோ ஞுயுணவருந்தித்
தேக்குநர்கொடுங்கோற் செருக்குக்காட்டலிற்
றிதுமின்றெனச் செப்பிடறுணிவே. (கய)

முற்றிற்று.

---

(இரண்டாவது)

## குருத்துவம்.

சகலமுழுதுமத் தன்மைவாய்தரப்
பெற்றதவனும் பெருங்குருவாமே. (க)

வெட்டுருவுடல்கொளு மேதகுகுரவற்
றெய்வத்தயலெனச் செப்பவொண்ணுதே. (௨)

எச்சமயங்களு மென்னவென்றேற்றே
குற்றங்களையுங் குருத்துவம்வலிதே. (௩)

குருவெனநிகழ்வான் கொன்றானருந்தாக்
கருணையைப்பெருக்குங் கடமையோனே. (௪)

எத்திறற்குருவு மிரக்கமிலானேற்
சத்தியஞ்சத்தியந் தருவனுமவனே. (௫)

தன்றவவலியாற் சார்ந்தமாணுக்கர்க்
கின்பந்தருகுரு வெவனே வொருவனே. (௬)

பக்குவத்தளவிற் பகர்தருகுரவன்
மிக்குயர்ந்தோனென விளம்புமூதுலகே. (௭)

கன்னியைத்துயர்செய் காமுகரென்னத்
தன்னிலைகிறியார் தமக்குரைத்துரைத்துப்
புண்செயுங்குரவர் பூமியிற்பலரே. (௮

வல்லான்குருவெனின் மாட்டாதாரையு
நல்லாற்றெருமுக நடாத்துமன்றே. (௯)

சமயக்குரவரிற் சூழ்தகையினருங்
கூலிகொள்குரவரிற் கூர்ப்பினர்தாமு
மிருப்பாரேயென் றியம்பிடத்தகுமே. (௧௦)

முற்றிற்று. ஆ சூத்திரம். ௨௦.



(மூன்றாவது)

## தவநிலை.

தன்றொழிலாவது தவமொன்றேயென
வள்ளுவனாதியர் வற்புறுத்தினரே. (௧)

சிவன்றிருமான்முதற் றேவர்பலரையுந்
தவரெனக்கூறுந் தருமமொன்றுளதே. (௨)

குருவார்செய்தலுங் கொற்றவனுக்கது
முற்றவபலமென மொழியத்தகுமே. (௩)

கருணைதோய்தலுங் காமங்கடிதலுந்
தவத்தினதுறுப்பெனச் சாற்றிடன்முறையே. (௪)

காமந்தவிர்தலுங் கடும்பகைகொலைபுலை
யாந்தவத்தினுக்கென் றறிகுநர்சிலரே. (௫)

செங்கோன்மன்னர்ச் சீர்பெறத்தாங்கலுங்
கொடுங்கோலரையர்க் குலத்தொடுகடிதலுந்
தவசிகள் கடனெனச் சாற்றிடன்முறையே. (௬)

உலகுபத்தநல மொன்றுமெண்ணாது
தாமுயக்கருதுந் தவத்தினர்பலரு
நாயனையாரென நவிலத்தகுமே. (௭)

தன்னலந்தாழ்த்தித் தாரணியுய்யு
நன்னலமுயர்த்துந வரகுலத்தவனே

பாயினுமவனே யரியெனத்தகுமே. (அ)
புவியமுநாளிற் பொன்றலும்பிறப்புந்
தவிர்கதியெய்துந் தவத்தோன்றலினு
மதுமகிழ்வதுவேட் டானமட்டுழைத்துப்
பலர்நகவிறந்தோன் பண்புயருண்மை
பருளுடைப்பரமே யறிதற்பாற்றே. (கூ)
இகபரம்வாழ்வித் திறப்பொடுபிறப்பின்
றுயவிடடைத லருந்தவப்பயனே. (க0)

முற்றிற்று. ஆ சூத்திரம் ௩0.

---

(நான்காவது).

## வேதியர் தன்மை.

தன்னுயிர்போல்வன சருவான்மாக்களு
மென்னுமீரந்தணர்க் கியற்கையதாமே. (க)
இந்திரற்கட்டிலொ மர்க்கும்வேதிய
ரவனூர்நலம்விழைந் தருந்தாருனே. (உ)
சீரருள்விழைவோன் றெய்வப்பிராமண
னழற்றசைநுகர்வோ னசுரவேதியன்
றம்மிற்றாழ்ந்தார் தமக்கேபணிசெயற்
காதலிக்கின்றோன் கடைப்பார்ப்பானே. (௩)

மனைமகளினரொடு வாழினும்பார்ப்பான்
றவர்பெருங்குழாத்திற் சார்ந்தோன்றனே. (௪)
எவ்வகைத்தேவர்க் கிடுமுனைவாதியு
முண்டனுபலிக்கற் குரியர்வேதியரே. (௫)
ஆயிரந்தோளிறை யாதியர்பலரையோ
ரந்தணச்சிறுவ னளிதருபரசால்
வென்றவன்மை விளப்புமிவ்வுலகங்
குயமகடன்னைக் கூடியோர்பனவன்
பெறுமகன்றன்னுற் பிதகநாடு
மதிக்குமோர்வேந்தன் மாய்ந்ததுஞ்சொனுமே. (௬)
கந்தநால்மலர்க் கடவுணூற்காக்கு
மந்தணர்மாட்சி யறிவரும்பாற்றே. (௭)
அந்தணர்நெறிச்சென் றல்லதியாண்டியாருஞ்
செந்தணைமூத்திச் சீர்பெறலரிதே. (௮)
சாதியொழுக்கந் தவறினு மற்றோர்
வேதியர்க்கிந்நை விளம்பவொண்ணதே. (௯)
வேதியமகவா மேதினிப்பிறந்தாங்
கிதியல்வார்போற் றீயரின்றே. (௰)

முற்றிற்று. ஆ சூத்திரம். ௰.



(ஐந்தாவது)

## அரசர் தன்மை.

சரதமுநீதியுந் தயையுஞ்சார்தரு
மரசன்மாநிலத்தோர்க் கனையனையானே. (க)

பொய்புலைகோரம் பொருளாசையாதிய
வெய்துமன்னுலகோர்க் கெமனனையானே. (உ)

எக்கணத்திகல்வந் திறுக்குங்கொல்லெனு
மச்சமும்வீரமு மணைதருமன்னே
யரசோர்பெருஞ்சுமை யாமென்றறிவனே. (ங)

தயரதன்மகனெனத் தாரணியோருங்
கஞ்சுமன்னிகலா லழியானன்றே. (ச)

சூழில்பாழ்ஞ்செய்க்கிறை கொள்ளுங்கொடுங்கோன்
மன்னர்செயுநாண் மலரவன்கைக
ளெட்டுங்காரிவந் திறுக்கத்தகுமே. (ரு)

இகனமக்கின்றென் றிருமாப்படையு
மன்னர்போது மடமையோரின்றே. (சு)

ஆலயம்பசுக்க ளந்தணர்புலவோர்
மாதர்கற்பாதியின் மன்னனேக்கம்
பெரிதுவைத்தளிக்கிற் பீடுறுமன்றே. (எ)

மறைவறத்திடலான் மாநிலந்தளர்நாள்
வாள்வலித்தடக்கை மன்னனுன்று
நல்லுணவினைத்து நாய்மலம்போன்மே (அ)
தெய்வந்தன்னொடுஞ் சித்ராதியரொடும்
பேசலுமன்னன் பெறத்தருந்தருமே. (௯
நன்முறைசெய்பினு நலிவுறவருத்தினு
மன்முதற்றேவா மாநிலத்தினர்க்கே. (௧௦)

முற்றிற்று. ஆ சூத்திரம். ௫௦.

---

(ஆறாவது)

## வணிகர் தன்மை.

செட்டெனுஞ்சொற்பொருள் சிறிதேயாயின்
முழுதனைப்புலமை முருகறியானே
வளனதுபினைதலி னன்றதேயாமே. (க)
பத்திகொண்டு பழுதில்வீடதனுஞ்
செட்டெனின்மற்றது திருமாறின்றே. (௨)
வணிகர்தாமுலோபம் வாய்ந்தோரெவ்கை
தரணிமுற்றுந் தபனனொத்தெறிப்பினு
மொவ்வோர்காலவர்க் குதிக்குமுதார
மகிதலமுழுதான் மன்னரெய்தாரே. (௩)

கொள்ளல்கொடுத்தலின் குணமுங்காலமும்
பொருணலங்கேடும் போதத்தெளிதல்
வணிகர்தங்கடனென மாநிலஞ்சொலுமே. (ச)

கலமுகைப்பாரிற் கள்வருங்காட்டிற்
பைக்கூறைப்பொருள் பலவிற்பாரிற்
சீரியர்தாமுஞ் சிலரிருப்பாரே. (ரு)

வட்டியினுசை மலிவுறும்வணிகன்
கொட்டியபொருள்கரிக் குவையாமன்றே. (சா)

சற்குருமொழிவழி தானியம்விற்றோன்
பொற்கல்லொன்று புணரியிற்போக்கியுந்
தானுவந்து தாளடைந்ததுவே. (எ)

ஈசனளித்த வெழினமாங்கனியொன்
றினிதருந்தினன்முத லெண்ணில்பல்லோர்
வணிகர்தங்குலத்தின் மாண்படைந்தோரே. (அ)

மழைமலிந்தியங்கும் வளநாடொப்ப
வேனையநாடு மியங்கச்செய்யும்
வணிகமாந்தர்தம் மாட்சிமைவலிதே. (சு)

வாரிதிகுடித்து மலயமால்வரை
மீதுறைமுனிக்கோன் விளம்புநூல்வாய்
சூரியோர்வணிக ரெனக்குலவியதே. (கo)

முற்றிற்று. ஆ. சூத்திரம். சாo.



(ஏழாவது)

## சூத்திரர் தன்மை.

நால்வகைக்குலத்துளு நாலாங்குலத்தின்
கிளைபலபலவாக் கிளைத்துளவன்றே. (௧)

சூத்திரர்செய்யுந் தொழில்பலவவற்று
ளுழவுபோலு முறுதியொன்றின்றே. (௨)

விழுமியமாதவர் வேதியர்தமக்கு
முழுதொழிற்கூழே யுணவாமன்றே. (௩)

செங்கோல்கொடுங்கோ லெனத்திகழிரண்டுந்
தாற்றுக்கோலாற் றரப்படுவனவே. (௪)

மழைப்பொருட்டேனு மாநிலம்படைத்தாற்
றொழுதெழுதிறைஞ்சல் சூத்திரர்கடனே. (௫)

காலின்றாயிற் கவின்றலையாதிய
அயருறுமாறே சூத்திரரிளைப்பின்
வேதியராதியர் மிகத்தளர்வாரே. (௬)

நீதிநூற்பகுதி நிகழ்த்தினர் தம்மிற்
சீரியவௌவையுந் திருவள்ளுவரு
முழுதொழிலினுக்கே யுயர்ச்சிகூறினரே. (௭)

வண்டமிழ்மதுரை மாநகர்வழுதி
கண்டதோர்சித்தர் கல்லானைக்கருள்
கரும்புஞ் சூத்திரர் கழனிப்பொருளே. (௮)

சிவன்மாலாதிய தேவர்தாமு
முழுவாலாமுனை வண்குரராயின்
மற்றெவரதனை மறுக்கவல்லாரே. (கூ)
பத்தியுந்தவமும் பாழென்றிகழ்ந்து
கருமந்தானே கத்தாவென்னு
மவருமுழுதொழி லதுமுதற்றெருட்டுச்
செய்யுமாறு செகமுழுதறியுமே. (க0)
முற்றிற்று. ஆகசூத்திரம். எ0.

---

(எட்டாவது)

## பஞ்சமர்தன்மை.

உயிர்க்கொலையூனுண வுடையாரெவரு
மைந்தாங்குலத்தின ராமெனன்முறையே. (க)
அரசனுத்தர மகிலத்துள்ளார்
பலர்க்குமுணர்த்தல் பஞ்சமர்கடனே. (உ)
நால்வகைக்குலத்து நரர்க்குங்கீழ்ப்படிந்
தொழுகும்பஞ்சம னூறுளோனலனே. (ந)
கடுகளவூனுங் காதலிக்கில்லா
னைந்தாங்குலத்தின னயினுமவனைச்
சீரியர்தம்மொடு சேர்க்கத்தகுமே. (ச)

நாளைப்போவா னறுந்தமிழ்ப்பாணை
னியாழ்வலான்முதலா மெண்ணில்பல்லோ
ரைம்பாற்குலத்துதித் தருளடைந்தோரே. (ரு)

கருமநூலோர் கழிப்பினும்பத்தித்
துறையினர்பஞ்சமர் தொண்டிகழாரே. (சா)

கொலைபுலைபொய்ம்மை யாதியகொடுந்தகை
நீத்தோரொருவ னீசக்குலத்தி
லுற்பவித்திடினு மவையுடையோரு
மற்றைக்குலத்தனின் மாண்புடையோனே. (எ)

ஐந்தாங்குலத்தி னருந்தநிகற்பின்
முதற்குலத்தரிவையர் மூவிருவோரு
மொஞ்சத்தக்க வுயர்ச்சியெய்தினளே. (அ)

அனுவுந்திரணமு மாதியபிறவுந்
தெய்வத்துருவெனத் தேறிவிட்டி
லடைந்தவேதியர்க் களவின்றொருவரும்
வேள்விக்கொலையு மிகக்கொடிதேயென்
றைந்தாங்குலத்தி லவதரித்திட்ட
வாதிமக்களைப்போ லறைந்திலரன்றே. (கூ)

புலைகொலைபொய்மை பொருந்திநீசக்
குலத்திலும்பிறந்த கொடியோர்தம்மைக்
காண்டலுமாகா தென்பர்கற்றோரே. (கo)

முற்றிற்று. ஆசூத்திரம். அo

---

(ஒன்பதாவது)

## கருமம்.

வேதஞ்சொல்லினும் விரிஞ்சனாதியர்
நேரிற்கூறினு நீசர்க்குரித்தாங்
கொலைபுலைசெய்தல் கூடாதன்றே. (க)

சமயாதிதத் தன்மையெய்திடினுஞ்
சவுசமாதிய தணவவொண்ணாதே. (உ)

தன்குலதருமந் தாழ்ச்சியதாகில்
விட்டுநல்லன மேவத்தகுமே. (ங)

மேலாங்குலத்தினர் மேழிவேட்டலு
நாலாங்குலத்தினர் நான்மறையோதலு
மனையனநிகழி னகிலநொந்தழுமே. (ச)

நீசர்கைக்கொடுங்கோ னிகமரூன்வேட்கை
யாதியநிகழ்கா லருந்தவம்பயிர்கள்
பசுக்களாதியின்பயன்குறைவுறுமே. (ரு)

மந்திரபலத்தான் மன்னர்தாமு
மஞ்சுறவாழ்த லந்தணர்கடனே. (சு)
மாரிகுன்று வளமேகருதி
யறம்பெரிதிட்ட லரசர்கடனே. (எ)
வாய்ச்சொற்புரத்தலும் வட்டியினுசை
வளராத்தன்மையும் வணிகர்தம்பாலவே. (அ)
உண்டிவேட்டோர்க் குதவுமொண்டகை
சதுர்த்தர்தன்மையிற் றலையாமன்றே. (கூ)
தவருவப்பனவே சத்தாங்கரும
மவர்வெறுப்பன முழுதசத்தாமன்றே. (க0)
முற்றிற்று. ஆ சூத்திரம். க0

---

(பத்தாவது)

## உபாசனை.

தெய்வநாட்டஞ் சிறிதுமில்லா
மானிடர்யாவரு மறையனையாரே. (க)
உருவமுமருவமு மொன்றுந்தெய்வத்
தன்மையாயினுந் தனிமனக்கண்கொண்
டுருவாநாடுத லுத்தம *மன்றே. (உ)

---

* அன்றே என்பது அசை.

தெய்வசிந்தனையே திருக்கிளர்தவமா
மெழுத்தைநாட லியம்பன்மட்டுதல்
காற்றெடுமுரண லாதியகடையே. (௩)
பலவற்றென்றெனப் பழகப்பழக
யாவுந்தானு வியங்குமன்றே. (௪)
எந்தேவுந்தே வெனவிகல்கின்று
ரிளம்பக்குவத்தோ ரென்பதுதுணிவே. (௫)
தானெருமூர்த்தி யார்ந்தகைவரினும்
பற்றியவுருவப் பாவனைவிடானுக்
கண்டுதேறுங் களிப்புறுதவனே
சித்திமுத்திகளின் சீர்பெறுவானே. (௬)
வங்கந்தனையிகழ் மடமலிவாதியும்
விடங்கொடிதென்றிகழ் வெங்கட்பணியுஞ்
சித்திவம்பென்றிகழ் சிறுமதித்தவனு
மொன்றெடொன்றுறழ்தற் குரியபொருளே. (௭)
கடன்மலைமுதலாக் காண்டகுமுலகைச்
சிட்டிசெய்ததுமோர் சித்தியாமே. (௮)
தெய்வங்கண்ணெதிர் திகழாதென்னும்
புன்மைத்தவத்தோர் புராணம்பலவற்
றெண்ணில்பற்பலர்கண் டிட்டதாகச்

சொல்லன்முற்றிகழ்ந்த தோடமெய்திக்
கீழ்மையராகிக் கெடுவாரன்றே. (கஅ)
கோசிகன்முதலோர்க் குழியாத்தவத்தோர்
பாவமலிவாற் பலிநுகர்வோரே. (கo)

முற்றிற்று. ஆ சூத்திரம். ஈ.

---

(பதினொன்றாவது)

## ஞானம்.

அம்பரமுதன்முழு தாகியாகாளை
நம்பல்போது ஞானமொன்றின்றே. (க)
நானெனவென்னி நலங்குலைவதினு
நீயெனக்குறிக்கு நிலைபினிதாமே. (உ)
ஒன்றேபரமென் றுணரார்ஞானங்
கன்றேதம்பல காட்டுமன்றே. (ந)
ஞானமெய்தியபின் னல்லருட்சித்தியு
முத்தியுமெய்தன் முறைமையாமே. (ச)
வெல்லத்தினிப்பும் வேம்பின்கசப்பு
மறிதலுமொருமூன் றுயகால
நிகழ்ச்சியுமறிந்து நிகழ்த்தலுஞானமே. (ரு)

கல்விஞானங் கானசரஞான
முதற்பலநிகழினு மூவாமுதலொடு
கலக்குமெஞ்ஞானங் கடுப்பதின்றே. (சா)

அஞ்ஞானத்தி லமிழ்தருசிறுவர்
ஞானமுற்றேமென நன்குமகிழ்தலு
ஞானமுற்றோர் நாரணனதியர்
திறங்குறித்தெய்தில மெனத்தேம்புதலும்
பழமையாமெனப் பன்னுமுந்நாலே. (எ)

தோற்றமட்டிற் றுலங்குவதாகி
யெவ்வகைத்தேவ ரியற்கையுங்காட்டும்
பிரணவசரீரம் பெற்றுவாழு
மவனதுஞான மதிகமாமே. (அ)

ஈனமில்பெருமா னீயும்பேற்றுண்
ஞானம்போலு நலத்ததொன்றின்றே. (கூ)

மாண்டார்மீளவும் வருத்தினர்பல்லோர்
மனிதர்யாரு மாமிசமருந்தாப்
புனிதமெய்தப் புரிதன்மிக்குயர்வென
ஞானமெய்தி நாட்டிலரொருவரு
மாதலினண்டா னளித்தவளவி
லறிவுடையனவா மாருயிர்த்திரளே. (க0)

முற்றிற்று. ஆகூ சூத்திரம். ௱௰.

(பன்னிரண்டாவது)

## பொதுஞாயம்.

சுத்தபூசை தோய்தருமாயிற்
பேயுந்தெய்வமாம் பிணைப்பலியேற்கிற்
றெய்வமும்பேயா மெனுமிதுதிறமே. (க)

தவர்குழாந்தன்னி லொவ்வொருவனுஞ்சிற்
சிலர்க்கொருகுருவா மெவனேவொருவ
னொருசமயத்தோர்க் குரியசற்குருவா
மவரின்மிக்கரியா னருட்பொதுக்குருவா
மித்திறமருட்பேற் றீட்டினதளவே. (உ)

பனவனிற்சிர்த்த பஞ்சமன்றானும்
பஞ்சமன்றனிற்றாழ் பனவன்றானு
மிருப்பாருலகிலென் றியம்பிடறுணிவே. (ங)

எத்திறன்மன்னரு மேங்கமிளிர்தரு
சித்திபோலுஞ் செல்வமொன்றின்றே. (ச)

வண்டமிழ்க்கவிகளில் வண்ணம்போலு
மொண்டகையினதின் றென்பதுறுதியே. (ரு)

எவ்வகைச்சமயமு மிறையுங்குருவும்
பந்தமுமுத்தியும் பகர்வனதாமே. (சா)

அறந்தபேதத் *தறுவகைச்சமயமு
மவைமுழுதொருவனுந் தழுவனுமாகு
†மதீதநெறியொன்று மாயவேழும்
வழிபடற்பொருட்டே ‡வாரமேழாயவே. (எ)

§எட்டுச்சந்தமு மியைதருபுலமையுஞ்
சித்தியோ ||ரெட்டுஞ் சேரப்பெறுவான்
கருணையொன்றிலனேற் கடைப்படுவானே. (அ)

ஒருவிதச்சமயத் துள்ளானெனினு
மெச்சமயத்து மென்றேவொன்றே
யவரவர்மனம்போன் றவிருமென்னி
லவனைப்பொதுநலத் தவரிகழாரே. (௯)

---

*அறுவகைச்சமயம் — சௌரம்-சைவம் - சாத்தேயம்-வைணவம் - காணபத்தியம் - கௌமாரமென்பன. இவை, வைதிகசமயங்கள்.

† அதீதநெறியாவது-சமயாதீத நிலை.

‡ இவற்றிற்குரிய வாரங்கள் முறையே, ஞாயிறு-திங்கள்-செவ்வாய்-புதன்-வியாழன்-வெள்ளி-சனி. ஆ எ

§ எட்டுச்சந்தமாவன-தத்த-தாத்த-தந்த - தாந்த-தன-தான-தன்ன-தய்ய-என்பன.

|| எட்டுச்சித்தியாவன-அணிமா-மகிமா- லகிமா-கரிமா-பிராத்தியம்-பிராகாமியம்-ஈசத்துவம்-வசித்துவம்-என்பன.

மெலியாவீரமும் வென்றியுமேலோ
ரானுரிகழா வருட்பெருஞ்சித்தியு
ஞானாசாரமு நல்லறு பூதியு
முடையானுலகோர்க் குய்வருடெய்வமே. (௧௰)

முற்றிற்று. ௮௨ சூத்திரம். ௩௨௰

சத்தியசூத்திரநூன் முற்றிற்று.

---

## நூற்பயன்.

---

நேரிசை வெண்பா.

பாடியலுத்தேற்பிடித்துப் பாரதியாள்பாருலகங்
கேடியலாவண்ணங் களைத்துவித்தா—னீடில்புகழ்ச்
சத்திய சூத்திரநூல் சார்ந்தொழுகுவார்பலர்க்குஞ்
சித்தி முத்தி நல்குவதுண்டே.

மெய்யடியார் திருவடிகளே சரணம்.

தெய்வமேதுணை.



உ

குருவே துணை.

# சத்தியவாசகம்.

காப்பு.

சூத்திரம்.

சத்தியவாசகஞ் சாற்றும்பொருட்டோரே
நித்தியப்பொருளை நினைந்துகைதொழுவாம்.

நூல்.

(வசனம்)

சகலலோகங்களிலுமுள்ள சருவான்மாக்களுக்கும் பொதுவாகிய தெய்வமொன்றுண்டு. (க)

பூரணசந்திரனைப்போன்று குளிர்ச்சி செய்கின்ற கருணையும், உச்சிக்காலத்துச் சூரியனைப்போன்று சூடு செய்கின்ற நீதியுந் தெய்வத்தின் றிருவுள்ளத்திலிருக்கின்றன. (உ)

தெய்வமுண்டென்று மில்லையென்றுங் கவனியாம லாகார நித்திரை முதலியவற்றிற் சிந்தையாய்த் திரிகின்ற மிருகாதிகளிலுந் தாழ்ந்த பாவிகளாய்ச்

சதா தெய்வமில்லையென்று போராடுகின்றவர்களுக்கு மூட்டியுறக்காட்டுகிறதே தெய்வத்தின் கருணைக்குப் பெரிய வடையாளமாய் விளங்குகின்றது. (௩)

தெய்வதண்டனைக்குக் கொஞ்சமும் பயப்படாத கொலைஞர் திருடர் முதலியோர்களையுஞ் சிட்சிக்கத் தக்க சட்டதிட்டங்களோ டரசாட்சி செய்கின்றவர் களு மொருக்காற் கொடுங்கோன்மை செய்வார்களாயின், இரத்தினகிரீடந் தரித்த தலைகளை நாயு நரியுங் கௌவும்படி போர்க்களத்தில் வெட்டுண்டு கிடக்கச் செய்வதே தெய்வத்தி னீதிக்குப் போதுமான சாட்சியாயிருக்கின்றது. (௪)

தெய்வமுருவமென்று மருவமென்றும் போராடுகின்றவர்க ளிரண்டுவிதமாயும் விளங்குமென்பவர்கள் சமூகத்தி லவமதிப்படைவார்கள். (௫)

ஓரரசனுக்குப் பலபத்தினிக ளிருப்பதுபோற் சகல சமயங்களுந் தெய்வமொன்றிற்கே யுரியனவாகும். (௬)

உயர்ந்த சமயங்களுந் தாழ்ந்த சமயங்களு முண்டென்பதே ஞாயமாகும். (௭)

அபிமானத்தாற் பொய்யு மெய்யுங் கலந்துபேசுவது சமயவாதிகளுக்குச் சுபாவமாகும். (அ)

உண்மை தெய்வத்துக்கு மதையறிந்த ஞானவான்களுக்கும் விளங்கும். (கூ)

தெய்வத்தை மனத்தாலு நேத்திரத்தாலுங் கண்டு பேசத்தகும். (க0)

மனத்தாற்றெய்வத்தைக் காண்பவர் மனச்சாட்சியான வின்பமனுபவிப்பார்கள். (கக)

நேத்திரத்தாற் றெய்வத்தைக்கண்டு வரப்பிரசாதம் பெற்றோர்களே பிறருமறியத்தக்க வற்புதங்களைச் செய்யவல்லவராவார்கள். (கஉ)

தெய்வஞ் சருவ வல்லபமுடையதென்றெப்பியுங் கண்ணுற்காணப் படாதென்பவர்கள் விவேக சூனியரேயாவார். (கங)

எல்லாச்சமயமுந் தெய்வதெரிசனம் பெற்றவர்களா லேற்படுத்தப் பட்டவைகளே. (கச)

அபிமான பேயீட்டாற் பழயசமயமொன்றைப் பலப்படுத்துகின்றவர்களும் பகைத்தன்மையாலொரு சமயத்தை யழிக்கின்றவர்களும் ஆணவத்தாலொரு

சமயத்தை யுண்டுபண்ணுகின்றவர்களு மெந்தக்காலத்திலு முண்டாவார்கள். (௧௫)

தன்னுலேற்படுத்தப் பட்டசமயமொன்றே வாழவேண்டுமென முயற்சிக்கின்றவ னகங்காரகுருவெனப் பேர் பெறுவான். (௧௬)

சிவகருணை முதலிய நல்லொழுக்கமுடைய சமயங்கள் யாவும் வாழவேண்டுமென முயற்சிக் கின்றவன் ஞாயகுருவெனப் பேர்பெறுவான். (௧௭)

எல்லாச் சமயங்களும் வாழவேண்டுவனவேயவைகளிலுள்ள குற்றங்களை மாத்திரங்களையவேண்டுமென முயற்சிக்கின்றவன் பொதுக்குருவெனப் பேர் பெறுவான். (௧௮)

ஒரேசமயம் விளங்கி மற்றச்சமயங்களெல்லாமழிவது மின்னஞ் சில சமயங்களேற்படுவதுஞ் சம்மத மென்பவன் சமரசகுருவெனப் பேர்பெறுவான். (௧௯)

ஆடுமுதலியவற்றைப் பீசமர்த்தனத்தாற் கொன்றுவெந்து தின்னவும், தெய்வமில்லை யென்று சொல்லவும், மற்றும் காலம் கரும முதலியவற்றிற்குப் பரத்துவஞ் சொல்லவும், தெய்வத்திற்குப் பித்தவுபரியுண்டென்னவுந் திருட்டுத்தன்மை யுள்ள தென்னவுஞ்

சொல்லவும், குருவைவருத்தப் படுத்தல் நிந்தித்தல் புண்ணியமென்று சொல்லவும், சிசுக்களின் குறியைக் கொய்தல், முதலியசடங்குகள் செய்யவுஞ் சம்மதப் படுகிறசமயவாதிகள் இன்ன மொருகுரு ஏதாவது விபரீதமொன்றேற் படுத்தினாலும் அந்தப் பட்சத்திலு முடன் படுவார்களென்பதே சித்தம். (உ0)

எவ்விதப் பிரயாசமெடுத்துக்கொண்டாவதொரு வன் றெய்வ கிருபையைப் பெற்றுக்கொள்வானாகில் அவனிவ்வுலகத்தி லெதுசெய்தாலுஞ் செய்யலா மென்பதே திண்ணம். (உக)

அருட்பிரசாதம்பெற்ற வொருவன் குற்றஞ்செய் தாலு மவனையுந் தெய்வந்தண்டித்தே பின் பிரட்சிக்கு மென்பதற்குச் சாட்சி சுந்தரமூர்த்தி நாயனார் நேத் திரமிழந்து வெகுவா வருந்திப் பின்புய்ந்து கதிசேர்ந் தது முதலியனவாம். (உஉ)

தெய்வகிருபையாவ தரசர் சிநேகமாவது கிடை க்கப்பெற்றால், மிகவும் பயபத்தியாய் நடக்கவேண் டும். அப்படிக் கில்லாமற் கெருவங்கொண்டாற் சீக் கிரத்திற் றண்டனை கிடைக்கும். (௩உ)

தெய்வத்தை நம்பிப் பாடுபட்டுத்தேறுகிறதைப் பார்க்கிலுந் தெய்வபத்தரை நம்புவதுத்தமமென்ப தற்குச் சாட்சி மதுரகவியாழ்வா ரப்பூதியடிகளாதி யர் பலராவார். (உச)

தெய்வத்தன்னை நம்பிய விருதிறத்தாருட் கலக நேரிட்டால் வலியவர்பட்சத்திற் சேர்ந்துகொண்டு மெலியவரைக் கெடுக்குமென்பதற்குச் சாட்சி யநேக முள்ளன விபரஞ்சொன்னாற் சில சமயத்தோர் விச னப்படுவார்கள். (உரு)

ஒரு பத்தனாற் பல பிராணிகள் மோட்சமடைய லாமென்பதற்குத் திருஞான சம்பந்தப் பிள்ளையார் சரித்திரமே சாட்சியாம். (உசா)

மோட்ச மடைந்தார்களென்று பலராற் சொல் லப்பட்டும் பிறக்கின்றோர்களுமுண்டு. (உஎ)

மோட்சமென்பது பல பிரயோஜனங்களைப் போன்ற வொன்றன்று. (உஅ)

சரம் அசரமென்னு மிருவகைப் பிறப்பிற் பட்டுச் சுழல்கின்ற வான்மாக்களுக்கு. மோட்சத் தைப் பார்க்கிலும் பெரும் பிரயோசன மொன்று மில்லை. (உகூ)

சொர்க்க முதலாகச் சாரூபம் வரையுள்ள வெவ்வொரு பதவிகளையு மோட்சமென்று நம்பு கின்ற மதங்கள் பலவாம். (௩௦)

சாலோகமுதலான பதவிகளடைந்தோர்க்குச் சரீரம் பூமியில் விழுமென்றும், மோட்சமடைந்தோர் கள் சரீரமொருவர் தொட்டெடுக்கப் படாதென்றுஞ் சொல்வதே தீர்மானம். (௩௧)

சரீரத்துடன் மற்றொரு லோகத்துக்குப் போன வர்களைப்பற்றி யொருக்கால் வந்தாலும் வரலாமெ ன்று சந்தேகிப்பது ஞாயமே. (௩௨)

வெளி-ஒளி-விக்கிரகம் - என்று மூன்றிலொன் றிலக்கியமாவார்க்கே பிறப்பில்லை யென்பது சித்தம். (௩௩)

வெளியில் அல்லமாப்பிரபு-மாணிக்கவாசகர் முதலோர் கலந்ததும், ஒளியிற் சடகோபர் திருஞான சம்பந்தர் முதலோர்கலந்ததும் விக்கிரகத்திற்றிரு நாவுக்கரசர் திருப்பாணாழ்வார் முதலோர்கலந்ததும் பிரசித்தமாய் விளங்குகின்றன. (௩௪)

ஔவையார் சுந்தரமூர்த்தி முதலானோர் சரீரத் துடனிவ்வுலகத்தை விட்டுப்போனதும் விளங்குகின் றது. (௧௫)

ஆன்றோர் விதித்துள்ள நூல்களை நம்பாதவர் கள் பந்தமோட்ச விபகாரங்களிற் பிரவேசியாமலு லோகாயுதன் அநீசுரவாதி முதலோரிற் சேர்ந்து கொள்ளவேண்டுவது. (௧௬)

அநேகவித நூல்களிருப்பினு மவற்றுளுத்தம பாகமின்னதெனத் தெரியவேண்டுவது பெரியோர் கள் சகாயத்தாலாம். (௧௭)

தெய்வபக்தி சிவகாருணிய முதலியனவுண் டாக்குவ துத்தமநூலென்றும், அகங்காரம் சோம்பல் முதலியன வுண்டாக்குவது மத்திமநூ லென்றும், கொலைத் தொழில் பொருளாசை முதலியன வுண் டாக்குவ தகமநூலென்றும், பெரியோர்கள் சொல் வார்களென்பது சத்தியம். (௧௮)

உலகத்திற் பொருளன்னதான முதலிய நற்காரி யங்களுக்கும், மதுமாமிச பட்சண முதலிய தீயகாரி யங்களுக்குஞ் சகாயமாயிருப்பது போல் அருள் சித்தி முத்திகளைக் கொடுக்கு முத்தமகுருவுக்கும்,

அவகீர்த்தியு நகாமுங் கொடுக்கு மதமகுருவுக்குள் சகாயமாயிருக்கும். (௩௯)

பொன் வெள்ளி யிரத்தின முதலியன பொரு ளென விளங்குவது போன் மந்திரசித்தி வாக்குச் சித்தி யருட்சித்தி முதலியன வருளென விளங் கும். (௪0)

ஒருவனிலட்சாதிகாரியாவதன்முன்கோடீசுரனு கானென்பதுபோ லெப்படிப்பட்ட தவசியுஞ் சித்தனுவதன்முன் முத்தனுவதில்லை. (௪௧)

ஒருக்கால் முள்ளிச்செடி முதலியன முத்தி யடைந்தாற்போ லொருவராற் கொடுக்கப்பட்டா லெந்தப்பிராணியு முத்தியடையலாம். (௪௨)

மார்க்கண்ட முனிவர் போன்ற சிலர் மாத்திரங் காலகருமங்களைக் கடக்கலாமேயன்றி மற்றியாவரு மவற்றுட்கட்டுப் பட்டோரென்பது சருவசாஸ்த்திரப் பிரசித்தம். (௪௩)

போகமோட்சமென்னு மிரண்டுவிதவநுபவங் களுக்கும் திருவருட்பிரசாத மிருந்தாலுத்தமம். (௪௪)

போகாநுபவத்திற்குந் திருவருட்சகாயம்வேண் டுமோ வென்றையுறவோ ரிட்டவுண்டியெல்லாம்

புசித்த குண்டோதரன் முதலோரையு மநேகம்பெண் களுட னேககாலத்திற் சையோகஞ்செய்த கண்ணன் முதலோரையும் பற்றியோசிக்கக்கடவர். (௪௫)

அருட்பிரசாத சித்திக்குத் தவமேயாதாரமென் பதும், தவமென்ப ஈசுரத்தியானமே யாவதும், தெய் வம் பாவனைப்படி விளங்குமென்பதும், தீர்க்கவிவேகி களனைவருக்குஞ் சம்மதம். (௪௬)

ஒருவனொருமூர்த்தியைத்தியானித்தான்முதலிற் கனவிற்றோற்றி யிரண்டாவது நிட்டையிற்றோற்றி மூன்றாவது நேரிற்றோற்றும். (௪௭)

கனவில் நிட்டையிற்கண்டமாத்திரத்திற்றிருத்தி யடைந்துருவத்தியானத்தை மறந்துமோசம் போ னோரனேகர். (௪௮)

தெய்வத்தினருவலட்சணங் கருப்பஞ்சாறு போ லுமென்றும், உருவலட்சணம் அதனாலுண்டாகுங் கற்கண்டு போலுமென்றும், இவ்விரண்டிலொன்றை மற்றொன்றாக்குதல் கூடுமாயினும், அருவத்தையுருவ மாக்குதலே கடினமென்றும் அறியத்தக்க விவேகி களேகதேசமே யிருப்பார்கள். (௪௯

அகவிளக்கத்திலருவ தெரிசனமும் புறவிளக்கத்திலுருவதெரிசனமுஞ் சிரேஷ்டமாதலினிரண்டு தெரிசனமும் பெற்ற வொருவனே யுத்தமோத்தமமான கவியெனப் பேர்பெற்றுச் சித்திமுத்தி யென்னுமிரண்டிற்கு முரியனுவான். (ரு0)

தூலவெளியிற் பிரசன்னமாகத் தெய்வத்தைக் கண்டு வரப்பிரசாதம் பெற்று வாழ்ந்தவசுரர் முதலியோரக்கிரமஞ்செய்தபோது மற்ற முனீசுரர் முதலானோர் யாவருமடங்கியிருந்த விபரத்தைக்கவனிப்பவர்களுக்கு மூர்த்தி தெரிசனத்தின் பெருமை தோன்றும். (ருக)

சகளவுபாசகப் பிரசித்தரான சுந்தரமூர்த்தி முதலையுண்ட பிள்ளையைச் சிலகாலங்கழித்து வருத்தியதும், நிட்களவுபாசகப் பிரசித்தரான தாயுமானவர் தன் சரீரத்தைக்கூட மற்றொருவன் விக்கினத்தாலிழந்ததுந் தெய்வபத்தி செய்கின்றவர்களவசியம் யோசிக்கவேண்டுவது. (ருஉ)

ஒருபக்தன்றனது தெய்வத்தை மனக்கண்ணாற் கண்டு பேசியனேக ரகசியங்களைத் தெரிந்திருந்தாலு முலகத்தாருக்குச் சாட்சி காட்டமாட்டாதவனுயே

வருத்துவனுயினு மொருவாறு பக்குவிகளறியும்படிக் காக மகிமை விளங்கும். (ருக)

சித்தியிலாசையில்லாத தவசிக்கு வினைன திருத்தி யுண்டாகும். (ருஉ)

சித்தியிலாசையுற்ற தவசியெவ்வளவு ஞானநு பவமுற்றபோதுந் திருத்தியடையாமற் றவமுயன்று கொண்டேயிருப்பான். (ருரு)

திருத்தியானவத்தை யுண்டுபண்ணிக் கெடுக் கும், ஐயம் பயங்காத்தை யுண்டுபண்ணி நன்முயற்சி யிற்றூண்டும். (ருச)

ஊழ்வலிதென்போர்களுமுயற்சியே வலிதென் போர்களுமாகிய விருதிறத்தார்களுந் திர்க்கவிவேகிக ளல்லர். (ருஎ)

ஆண்பெண்ணென்னு மிருவகைச்சம்பந்தத்தான் மகப்பேறுண்டாதல் போன்று, அருட்சித்தி முதலிய வெவ்வகைப்பேறு மூழ்முயற்சியாகிய விருவித சம் பந்தத்தானுமே சித்திப்பது திர்மானமாம். (ருஅ)

ஊழ் தெய்வவசத்ததாயு முயற்சி சிவதந்திரமா யுந் தோற்றியபோதும் நன்முயற்சி செய்தற்கேற்ற

மெய்யுணர்வைக் கொடுத்தலும் அங்ஙனஞ் செய்யும் படி செலுத்துவதுந் தெய்வத்தின் றொழில்களாயே யிருக்கின்றன. (௫௯)

மிகவுஞ் சிறந்த பெரியோர்களா லேற்பட்ட அவனசையாமலனுவசையாதென்ற வாக்கியம் விவேகிகளினன்முயற்சியைக் கெடாது மற்றையோர்களுக்குச் சோம்பன் முதலிய துர்க்குணங்களைக் கொடுத்துக் கெடுக்கும். (௬0)

கல்விக்கட லளவுபடாதென் றொருவார்த்தை யுலகத்தில் விளங்குகின்றதாயினு மெந்தப் புலவன் மற்றொரு புலவனைக் காணும்போது பொறுமை முதலிய குணமுதியாதானந்த முதிக்கப்பெறுகின் றனோவவன் கல்விக்கடலின் கரைகண்டோனென் பதற் கையமில்லை. (௬௧)

கல்வியென்பது சருவசாஸ்த்திரங்களையுங் கற்றுப் பிரசிங்கிப்பதல்ல. தெய்வநிச்சயமுந் திருவருட் பிரசாதவாஞ்சையும் அதற்குத் தக்க முயற்சியுமேற் படப்பெறுதலேயாம். (௬௨)

தெய்வநம்பிக்கையாகிய ஞானமும் விற்பத்திப் பெருக்கமாகிய கல்வியும் பொருந்தினுற் பொன்மலரில் வாசமும் பொருந்தியதற் கொப்பாகும். (சஙு)

அனேகம் பெண்களைச் சேர்ந்தும் புத்திர பலமடையாதவொருவனும் விசேடவிற்பத்தியுற்றுங் கவனதாரை பெருதவொருவனுஞ் சமமாவார்கள். (சச)

மகப்பெற்றுளருமை மலடியறியாவாறு போலப் பாவலனருமை பண்டிதனறியான் என்பதுண்மையாம், (சரு)

பலசாஸ்திர விற்பத்தியுற்றும் பாடல் செய்யுந் திறமையுருதவர்கள் பாடுவோரைக் காணுந்தோறு முன்னூல்கள் கற்றுணர்ந்தாற்போதாதா என் வீணுப் பாடுகிறீரென மறுப்பதுண்டு, (சசா)

பூர்வகாலத்திற் பாவலர்களாற் பாடப்பட்ட நூல்களே தற்காலத்திற் பண்டிதர்களுக் காதாரமாய் விளங்குகின்றன. (சஎ)

சருவ சாஸ்த்திரங்களுக்கும் பாவலர் பெற்றதாயும் பண்டிதர் வளர்க்குந்தாயும் போலாவார்கள். (சஅ)

ஒருவன் பாவலத்தன்மை பண்டிதத்தன்மை யிரண்டுமடைந்திருந்தாலுத்த மோத்தமமாகும் (சாசு)

அருட்பிரசாத சித்தியடையாத வித்துவானும், தவசியும் எவ்வித மேம்பாடுற்றிருப்பினும் பலராலவ மதிக்கப்பட்டு வருந்துவார்களென்பது சித்தம். (எ0)

அரசன் சக்கரவர்த்தியாயுந் தெய்வத்துடன் வசனிப்பவனுயு மரசாட்சித் தொழில் பெருங்கஷ்ட சீவனமென்றுணர்ந்தோனுயு மிருந்தாலுலகத்திற்கு மிகவுநன்மையுண்டாம். (எக)

மற்ருேரரசனுக்கஞ்சுதல் கடவுட்டன்மையறியா தல் கோரகுணம் கொடுங்கோன்மை யரசாட்சியின் பேரிறுமாப்பு பெருங்காமம் பொருளாசை முதலான தீமைபொருந்திய வரசனுடைய குடைநிழலைப்பார்க்கி லும் நரகவாதனை மிகவுமேன்மையுடையதாம். (எஉ)

உலக நன்மையை யுத்தேசித்துத் தனது பொக்கிஷத்துத் திரவியத்தைச் செலவு செய்கின்ற வரசர்களுக்குச் சுபகீர்த்தியுந் தனது நன்மையின் பொருட்டுலகத்தார் பொருளைப் பலவுபாயத்தாற் கிரகிக்கிற வரசர்களுக்கவகீர்த்தியுஞ் சித்திப்பது சித்தம். (எங)

எந்தவேளையினமதராசாட்சியை யீசுரன் மாற்று வானோவென்றென்றுகின்ற வரசனே விவேகியா வதுபோல், நம்மையெல்ல வொருவரானு முடியா மெதன வென்றுமரசனே மூடனுவான். (எச)

தன்னை யநுசரிக்கினறவர்களைப் பாதுகாக்கின் றது மெதிர்ப் போரைக் கெடுப்பதும் வித்துவான் களுக்கு மரசர்களுக்கு முரியகுணமேயாம். (எரு)

கல்விக் கடலைக் கடந்த புலவனுக்குஞ் செல்வக் கடலைக்கடந்த வரசனுக்கு நாய்போன்றினத்தைப் பகைக்கின்ற துர்க்குண முண்டாகாது. (எசா)

வணிகருக்குச் சொற் றவறுமையுஞ் குத்திரருக் குப்பரோபகாரமு முக்கியமான நற்குணமாம். (எஎ)

ஆசை யளவுபாடாதென்பது பலர்வாய்பாடாயி னுந் தெய்வ கிருபையா லுண்டாகத்தக்கவருட் பிரசாதத்துள் ளடங்குவதேயாம், (எஅ)

ஐக்கியமோட்சத்தை யல்லாதமற்றெல்லாப் பிர யோஜனமும், மண் பொன் பெண்ணென்று மூன்று சையுள்ளடங்குவனவேயாம். (எகூ)

சக்கரவர்த்தியை மண்ணாசையும்இரசவாதியைப் பொன்னாசையும், வசியமோகன சித்திபெற்றோனைப் பெண்ணாசையும் பிடியாது. (௮௦)

அநுபவித்தேனும் வெறுத்தேனும், நிராசை யடையப்பெற்றோரே மோட்சாதிகாரிகளென்பது சர்வ சாஸ்திர சம்மதம். (௮௧)

நல்லோர்களுக்குக் கற்புடைய பெண்களை யிர்சிக்கின்ற பாவகருமம் நேரிடாது. (௮௨)

அக்கினி தேவனுடைய பத்தினிக்கருந்ததியைப் போலுருவ மெடுக்கச் சக்தியில்லாமற் போனதை யோசித்தாற் கற்பின் பெருமை நன்கு விளங்கும். ( )

அறிவுடையாரெல்லா முடையாரென்ற தமிழ் வேத வாக்கியந் தீர்க்க விவேகிகளா னன்கு மதிக்கத் தக்கது. (௮௪)

தெய்வாநுகூலமில்லாத காரியம் ஒன்றுஞ் சீர் படாது. (௮௫)

ஒரு சமயத்தின்வழியே சகுணப் பிரமோபாசனை செய்கின்றவர்களுக்கே யதார்த்த ஞானமுண்டாகும். (௮௬)

தெய்வமொன்றே யென்றுந் தெய்வமிகமேயெ ன்றும் ஔவையார் முதலாயினோர் சொன்ன வார்த் தைகளை விரும்பும் பக்குவமே ஞானத்தினடி யாகும். (அஎ)

சமரசஞானமுண்டாகப் பெற்று மிளம்பக்குவி களை யீடேற்றும்பொருட் டொவ்வொரு மதங்களையு முயர்த்தித் தனித்தனி சொல்லும் பொதுவாசிரியர் களு மொன்றையே வற்புறுத்துஞ் சிறப்பாசிரியர் களும் பலராவார். (அஅ)

சமயங்களனந்தமென்றும் பன்னிரண்டென்றும் அன்றோர்களாற் சொல்லப்பட்டிருந்தாலும், ஆறு சமயமென்பதே கிரமம், மற்றவைக ளவற்றினங்கி சங்களேயாகும். (அகூ)

சமயமென்ற சொல்லானது தெய்வத்தின் பண் பை விளக்குமென் றறியும் பெரும்புலவரேகதேச மே யிருப்பார்கள். (கூ0)

பலசமயங்களிலும் பலதெய்வங்களிருப்பதாய்ப் போராடித்தாமுங்கெட்டுப் பிறரையுங் கெடுப்போ ரான விளம்புலவரனேகரிருப்பார்கள். (கூக)

**சௌரவம்** என்ற சூரியசமயம் பிரகாசத்தன்மை காட்டி நின்றநுமார் முதலானோர்க்கு வியாகரணவிற் பத்தி முதலான செல்வங்களைக் கொடுத்தது. (௩௨)

**சைவம்** என்ற சிவசமயமெல்லாவற்றையுந் தன்னுட்கரக்கும் வல்லபத்தைக் காட்டி நின்று சனகாதியர்க்கு ஞான முதலிய பலபிரசாதங்களைக் கொடுத்தது. (௩௩)

**சாத்தேயம்** என்ற சத்திசமயம் பஞ்சபூதபௌதிகங்களை யுண்டுபண்ணுகின்ற சிட்டித்தொழிலைக் காட்டி நின்று கொங்கணசித்தர் முதலோர்க்குக் காயசித்திமுதலியவற்றைக் கொடுத்தது. (௩௪)

**வைணவம்** என்ற விட்டுணுசமயமெல்லாவற்றையுமிரட்சிக்குந்திதித் தொழிலைக் காட்டி நின்று துருவன்முதலோர்க்குக் காலசக்கரவளவை முதலியவற்றைக் கொடுத்தது. (௩௫)

**காணுபத்தியம்** என்ற கணபதி சமயம் பத்தர்களுக்கு நேரிடும் விக்கினங்களை நீக்குங்கருணையைக் காட்டி நின்று தேவர்களுக்கமுதஞ் சித்திக்கும்படி செய்தது முதலான லீலைகளையுடையது. (௩௬)

கௌமாரம் என்ற குமாரசமயம் அகத்தியருக்குபதேசித்தது முதலாகக் குருத்துவத்தை விளக்கிநின்று சகலவிரோதத்துக்குஞ் சமாதானத்துக்குமாதாரமா நின்றது. (௯௭)

குருவென்றுந் தெய்வமென்றும் பொதுப்படச்சொல்லு நிலையேசமயாதீத மென்னத்தகும். (௯௮)

குருவுந்தெய்வமு மில்லாத சமயமின்மையாலெல்லாச் சமயங்களுஞ் சமயாதீதமென்றே ஞானவான்களொப்புகின்றார்கள். (௯௯)

தெய்வமில்லையென்றுஞ் சுபாவவாதி முதலோர்களுங் குருவையொப்புதலாற் றெய்வத்தைப் பார்க்கிலுங் குருவுயர்ந்தபொரு ளென்றுணர்ந்தவர்கள் பெருமையளவுபடாதென்பது சத்தியம். (௧௦௦)

தெய்வமே குருவாவருமென்றசொற்கிசைகின்ற சமயவாதர்கள் பலராவார். (௧௦௧)

பரம சற்குருவாகிய தெய்வத்தைத் தன்னோடொருமனிதனைச்சொல்வார்களும்பலராவார் (௧௦௨)

தெரிசன மாத்திரத்திற் சர்வா பீஷ்ட சித்தியுங் கொடுப்பவருந் தபோமார்க்கத்தைத் தெரிவிப்பவ

ரும், கல்வியறிவு தோற்றப் போதிப்போருமாகிய மூவிதவாசிரியருமுறையேதராம்பிரிக்கப்படுவார்கள். (கoஙு)

எவ்வகைப்பட்ட நன் முயற்சியாலு மடையத்தக்க பிரயோசனங்க ளறம் பொரு ளின்பம் வீடென்னும் நான்கு விதமேயாம். (கoச)

உத்தம நூல்கள் பலவு மறமுதலிய புருடார்த்தங்களைப் பற்றிப் பேசுகின்றன வாகும். (கoரு)

பிதுர்தேவதைகளைப் பொருட்படுத்துவோனை யில்லறத்தானென்றும் நிராசையைப் பாதுகாப்போனைத் துறவறத்தானென்றுங் காருணியத்தைப் பெரிதாகக் கொண்டோனைப் பொதுவறத்தானென்றுஞ் சொல்லலாம். (கoசா)

பொன்மணி முதலிய வற்றாற் சிறந்தோனைச் செல்வப்பொருளோ னென்றும்; விற்பத்தி கவனதாரையென்பவற்றாற் சிறந்தோனைக் கல்விப் பொருளோனென்றும் சொல்வதுண்மையாம். (கoஎ)

அனேகம் பெண்கள் விரும்பிப் புணரப்பெற்றோனைச் சிற்றின்பக்காரனென்றும், சக்கரவர்த்திகளா

லுஞ் செய்தற்கரிய வற்புதங்கள் செய்வோனைப் பேரின்பக்காரனென்றும், இகலோக பரலோக மென்னு மிரண்டு மறத்தற்கரிய நன்மைகளைச் செய்வோனே புகழின்பக்காரனென்றுஞ் சொல்லக்கூடும். (க0அ)

பரலோகத்திலிந்திரபதம் வரையுள்ளவை சொர்க்கமுத்தி யென்றும், சாலோக முதற் சாரூபம் வரையுள்ளவை பதமுத்தி யென்றும் இவ்வுலகத்திற்றானே வெளி ஒளி விக்கிரக மென்னு மூன்றி லொன்றிற் றூலசரீரத்துடன் கலப்ப தைக்கமுத்தி யென்றும் பெரியோர்கள் சொல்வார்கள் (க0கூ)

சித்தி பெற லருமையென்றும் முத்தி பெற லெளி தென்றுஞ் சொல்கின்ற மூடருலகத்திலதிகமாயிருக்கின்றார்கள். (கக0)

பலபிறப்பிற் சித்தனான வொருவனே பின்பு முத்தனுவானென்பது திண்ணம். (ககக)

ஞானமொரு தீபமுஞ் சித்தியதன் பிரகாசமுமாமென்று அறிவதே யெதார்த்த வுணர்ச்சி யாகும் (ககஉ)

பொருளைத் துணைக்கொண்டதன்வழி நான கருமங்களைச் செய்திடேறக் கூடுமென்பதற்குக் கருணன் முதலோர் சான்றாவார்கள். (கக௩.)

அருள்பெற்று பாவத்தாற் கெடுவாருமுண் டென்பதற்கு இராவணன் முதலோர் சாட்சியா வார்கள் (ககச)

பத்தர்களுடைய பாவனைப்படி யெத்தனை சமய தேவதைகள் விளங்கினாலுஞ் சிவனைவிட்டுணுவை யென்னு மிரண்டிற்றொடுங்கும். (ககரு)

சிவனை சிவப்பென்பதும் விட்டுணுவை பச்சை யென்பதும் இரண்டு மொன்றோடொன்று சம்பந்த மென்பதும், ஒன்றுண் மற்றொன்று பெண்ணென் பது முபயவாதிகள் சம்மதம். (ககசு)

சருவநாமரூப சம்பந்த முள்ளதாயு மவற்றிற் கதீதமாயும் விளங்குகின்ற தெய்வ மொன்றென்று ணர்வதே யனேகபிறவிகளிற் றவமுடித்தவர் களுக் குண்டாகு முணர்ச்சியாகும். (ககஎ)

கருமம் பத்தி ஞான மென்னு மூன்றையு மொப் புக்கொள்ளத் தக்கசமரச நிலையினது பெருமை பெற் றோருந் தெய்வமு மேயறியத் தக்கது. (ககஅ)

Acc No: 36234



சரியை கிரியை யோகஞான மென்னு நான்கை யுமநுசரித்து நடக்கும் பொது நோக்குடையோரை யொவ்வொன்றி லபிமானித்தோ ரனைவரு மிகழ்வார் கள். (கககூ)

உத்தமோத்தம மாகிய பாகத்தை யிகழ்வோ ரும், அதமாதம மாகிய பாகத்தைப் புகழ்வோருங் கூடச் சிலரிருப்பா ராதலினாற் சற்குரு வாக்கியப்படி யென்றமாத்திர முபற்சித்து மற்றைத் தொழிலற நிற் பதே சிவேகிகளுக் கேற்ற நன்னிலையாம். (கஉ0)

சத்தியவாசக முற்றிற்று.

நூற்பயன்.

வெண்டளைக்கலிப்பா.

சத்தியவாசகநூல் சாற்றியது மென்செயலன்
றுத்தியுடையார்களுள்ளபடி நன்குணர்ந்து
பத்திநிலையிற் பதிந்து நின்று பாடுபட்டுச்
சித்திமுத்திப் பேற்றுற் றிருத்தி யடைவாரே.

தெய்வமே துணை.

மெய்யடியார் திருவடிகளே சரணம்.

---

உ

# விளம்பரம்.



இப்புத்தகம் வேண்டுவோர் விழுப்புரத்துக் கடுத்ததிருவாமாத்தூர் கௌமார மடாலயம், தி. மு. செந்திநயகம் பிள்ளையிடம் நேரிலும், தபால் மூலமாயும் பெற்றுக்கொள்ளலாம்.

